உ

ஓம் தத் சத்




# திருக்கோவில்களின் ரகசியமும், தரிசனம் தோத்திரம் செய்யவேண்டிய கிரமமும்.

இஃது

ஸ்ரீலஸ்ரீ வித்தியானந்த சுவாமிகளால்

இயற்றி

அன்பர்கள்

பொருளுதவியால்


மதுரை

சௌத் இந்தியா பிரிண்டிங் ஒர்க்சில்

பதிப்பிக்கப்பட்டது.

1960




உ
சிவமயம்

# முன்னுரை

வெண்பா

ஆலயக் கோட்பாட்டின் ஆதி ரகசியத்தை
சீலமுற வேமக்கள் செய்தனால்—ஞாலமதில்
வித்தியா னந்தமெனும் வென்றிபுகழ் மாதவனும்
சுத்திய ரூபமதாக் கண்டு.

முந்நீர் கடல் சூழ்ந்த இந்நில வுலகின்கண் மாந்தர்கள் உஜ்ஜிவித்தற் பொருட்டு சுருதியில் கருமம் பக்தி ஞானமென்னும் மூன்று மார்க்கங்களை கூறியிருக்கின்றன. அவற்றுள் உயர்ந்தோர்களால் இக்கலியில் இறைவனை அடைவதற்கு பக்திமார்க்கமே சிறந்ததென ஆராய்ந்து அறிந்து நிச்சயித்துள்ளார்கள். அதன் பிரகாரம் பக்தி செய்வதிலும் பிரதமத்தில் ஆலய வழிபாட்டின் ஒன்றன் மூலமாகத்தான் அவ்விறைவனை அடையவேண்டுமென்பது அறிஞரது கொள்கை. அதற்கிணங்க நமது சுவாமிகளும் ஆலயரகசியமென்னும் இந்நூலில் ஆங்காங்கு ஆழ்ந்த கருத்துக்களை வைத்தமைத்து மக்களிடத்தில் கருணைகூர்ந்து வரைந்திருப்பது மிகவும் புகழற்பாலதாம். ஆகையால் இந்நூலை அன்பர்கள் யாவரும்வாங்கிப் படித்து, அதன்படி ஈசனை மனமொழி மெய்களால் வழிபட்டு இறைவனை அடைவதோடு, இந்நூலாசிரியராகிய சுவாமிகளும் உலகுபகார நிமித்தமாக இன்னும் அநேக நூல்களை வெளியிட்டு உலகுக் களிக்குமாறு அவ்விறைவனையே யாம் பிராத்திக்கின்றனம்.

ஓம் தத்சத்

திருச்சிற்றம்பலம்.

தெற்குவெளிவீதி,
மதுரை.

அரு. சங்கரசுவாமி.
ம. கு. மடாலயம்.

உ

ஓம் தத் சத்



வித்தியானந்த சுவாமிகள்

3392

உ

ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம:

# திருக்கோவில்களின் ரகசியமும், தரிசனம் தோத்திரம் செய்யவேண்டிய கிரமமும்.

இந்து சமயம் பல துறைகளையுடையது; பல்வேறு முகப்புகளையும் கொண்டது. இவை தோற்றஅளவில் ஒன்ருேடு ஒன்று முரண்படுவனபோலக் காட்சியளிப்பினும், உண்மையில் அவ்வாறில்லை. இத்தகைய தனிப்பண்பு அமைந்தவை இந்துக் கோவில்கள்.

உலகத்திலுள்ள பொருள்கள் ஒவ்வொன்றும்—அவை உயிருள்ளவையாயினுஞ்சரி அல்லது உயிரற்றவைகளாயினுஞ்சரி ஒருவகைக் கதிர்களை வெளிவிடுகின்றன; இந்த உண்மை விஞ்ஞான அடிப்படையில் மெய்ப்பிக்கப்பட்டுள்ள ஒன்ருகும். இக்கதிர்களின் தன்மையும். செறிவும் அவை எந்தப் பொருளிலிருந்து வெளிவருகின்றனவோ அதனையே ஒத்திருக்கும். இத்தகைய பண்பமைந்த இரு கதிர்கள் ஒன்றுக்கொன்று அணித்தே வருங்கால் ஒன்றின் கதிர்கள் மற்ருென்றின் கதிர்களைத் தன்னுள்படுத்தி. தன்மயமாக்கிக் கொள்ள முயல்கின்றன. இவ்விருதிறக்கதிர்களில் எந்த வகை. வலிமையிலும், சக்தியிலும் பெரியதோ அவ்வகையே விஞ்சி மேலிட்டு நிற்கின்றது; தன்னிலும் ஆற்றல் குறைந்த பொருளின் கதிர்மீது தனது இயற்பண்பை முத்திரையிடுகிறது. இக்காரணத்திஞலேயே நமது முதாதையர் "சத்சங்கத்தின் பெருமையை" சன்மார்க்க சங்கப் பெருமையை, தெய்விக திருக்கூட்ட அருமையைப் போற்றிப்புகழ்ந்திருக்கிருர்கள்.

# அருட்கதிர்கள்

செம்மை நெறி பிடித்து ஒழுகி(சாத்விக முறையில்)அருள் வாழ்வு நடத்தி "ஆன்மிக முன்னேற்றம் எய்திய அருளாளர் ஒருவர் இருப்பதாகக்கொள்வோம்; சாந்திக்கதிர்களையும் பேரானந்தக்கதிர்களையும் அப்பெரியார் தம்மைச் சுற்றிலும் சுடர்விட்டுப்பரப்புகிறார். ஒருவர் அப்பெரியாரின் தரிசனம் பெற்று அவருக்கருகே சென்றாலும் போதும், அப்பெரியாரின் இணையிலா ஆற்றலை உணருகிறார். அப்புனிதக் கதிராகிய அருட்புனலில் மூழ்குகிறார்; தன்னுடைய தொல்லைகளையும், துயரங்களையும் மறந்து, ஒரு கணமேனும் அந்த ஆனந்தத்தையும் அகச்சாந்தியையும் அனுபவிக்கிறார். நலஞ்சுரக்கும் அப்புனிதக்கதிர்களின் வலிவும், அப்பெரியாரின்அருள்திறத்தையும், ஆன்ம வளர்ச்சித்தரத்தையும் சார்ந்திருக்கும். அத்தகைய பெரியோரின் திருமுன் செல்வதால், அவரினும் ஆற்றல் குறைந்தோர் நன்மையுறுகிறார்கள். இந்த விதி தாமசிக வாழ்க்கையில் அழுந்தி அல்லலுற்று வரும் தீயவருக்கும் பொருந்தும். அருட்பெரியாரின் திருமுன்வரும் எவரும் அவர் சுரக்கும் அருட்கதிர்களில் தோய்கிறார்கள். அக்கதிர்களின் நல்விளைவை அனுபவிக்கிறார்கள்.

ஆயினும் எத்தகைய புனிதக் கதிர்களும் எந்த விளைவையுமே ஏற்படுத்த முடியாத அளவுக்குத் தன்மனத்தைக் காடாக்கிக்கொண்டு தனக்குள்ளேயே எதிர்ப்புச் சக்தியை வளர்த்துக்கொண்ட ஒருசிலர் மட்டும் இத்தகைய நல்லார் முன்வந்தாலும்கூட எந்த அனுபவமும் பெறமுடியாது. ஏனெனில் அவர்கள்; தான் புனிதக்கதிர்கள் ஊடுருவமுடியாத அளவுக்கு ஏற்கனவே எதிர்ப்புச் சக்திகளை வளர்த்துக்கொண்டிருக்கிறார்கள். இதனாலேயே தீயோர் இணக்கம் தவிர்த்து, நல்லார் நட்பையே நாடவேண்டுமென்று நம் முன்னோர் அறிவுறுத்திச் சென்றனர். "நல்லாரைக் காண்ப

நுவும் நன்றே" என அறிவுறுத்திய சான்றோர் "தீயோரைக் காண்பதுவும் தீதே" எனக் கடிந்து ஒறுத்தனர். தீயோருடைய கூட்டுறவை வெறுத்துவிடு; பழைய புண்களின் தழும்புகள் உன்னிடத்திலிருக்கின்றன. தீய கூட்டம் அவற்றை வெளிப்படுத்தும்; அதுபோலவே நல்லோருடைய சேர்க்கை நம்மிடத்துள்ள நல்ல சமஸ்காரங்களை. உள்ளத்தில் மறைந்து கிடப்பனவற்றை வெளிப்படுத்துமென நாம் அறிவோம். நல்ல சகவாசத்தினும் பார்க்கப் பரிசுத்தமிக்கது உலகிலே பிறிதொன்றில்லை. ஏனெனில் நல்ல சமஸ்காரங்கள் அப்பொழுது மேலேவருகின்றன.

## ஒரே துறையில் சிம்மமும் ஆட்டுக்குட்டியும்

அகஸ்திய முனிவரின் ஆசிரமத்திற்கு அருகே ஓடிய ஆற்றில் சிம்மமும் ஆட்டுக்குட்டியும் ஒன்றேடொன்று அருகேநின்று நீர் பருகினவாம்! அவ்வாறு நமது புராணங்கள் கூறுகின்றன. தொழுகை மனப்பான்மையும், மூடநம்பிக்கையும் சேர்ந்துபடைத்த உயர்வு நவிற்சி அல்ல இது. இதற்குப்பொருள் உண்டு. இதுதான் அகஸ்திய முனிவர் நிறைந்த அருளாளர், சிறந்த தவத்தினர் என்பதற்குத்தக்க சான்று. அவருடைய அருளானந்தக் கதிர்களும்; சாந்திக் கதிர்களும் பேராற்றல் வாய்ந்தன. அவை ஆசிரமத்தைச் சுற்றிலும் சுடர்விட்டு ஒளிர்ந்தன. அக்கதிர்களின் வரம்புக்குள் வந்ததால் சிம்மம் தன்னியல்பை இழந்தது. ஆட்டைக்கண்டாலே தாவிப்பாயும் சிம்மமும் அமைதியாகத் தண்ணீர் குடித்தது. அதுவேதான் ஆட்டுக்குட்டியின் நிலையும். சிம்மத்தைக் கண்டாலே அஞ்சி ஓடக்கூடிய ஆட்டுக்குட்டி, கவலையில்லாமல் அதன்அருகே நின்று நீர் அருந்தியது. இதுஉணர்த்தும் உண்மைதான் என்னே? சத்சங்கத்தின் ஆற்றலும். பெருமையும் அளவிடற்கரியது. நல்லோர்கள் வாசஞ்செய்யும் ஆசிரமங்களே மடாலயங்கள் என்று வழங்கப்பெறுகிறது. மடாலயங்களின் சிறப்பைக் கூறவந்த பெரியார் ஒருவர் இவ்வாறு கூறுகிறார்:–

"திடம்பெற்ற ஞானிகள் சேர்க்கையினுற் பசிதீர்க்கை யினுல், உடம்புற்ற உண்மையை யோசிக்கையாற் உப தேசிக்கையால், இடம்பெற்ற மங்கை பங்காளரடியாரிருக் கையினுல், மடம்பெற்றபேறு திருக்கோயிலுக்கில்லை யிம் மானிலத்தே"

உலகை உய்விக்க வந்த உத்தமர்கள் திருக்கோவில் களையும் எழுப்பி அதில் ஆண்டவனையும் ஸ்தாபித்து அருளை யும் ஆற்றலையும் நல்கி விழாக்களையும் கொண்டாடச் செய் தார்கள்.

## ஆகமக்கலை

பண்டைக்கால மாமுனிவர்கள் நற்றவ வாழ்வு மிக்கவர் கள்; ஆன்மிக எல்லைகண்டபேரருளாளர்கள். ஆகவே அந்த ஞானச்செம்மல்கள்:அருட்கதிர் பரப்பும் ஆன்மிக நிலையங்க ளாகவே விளங்கினர். ஊனுடல் விரைவில் அழியக்கூடிய தென்பதை அவர்கள் நன்குணர்ந்தனர். ஆகவே தம்மகத்து நிறைந்துநின்ற அளப்பரும் ஆன்மிக ஆற்றலை பன்னெடுங் காலத்திற்கு அழியாச் சக்தியாக மாற்றிஅமைக்க விரும்பி னர். ஆகவே நெடுங்காலத்திற்கு அழியாத கல்லிலும், செம் பிலும், பல்வேறு உலோகங்களிலும் சிலைகளை உருவாக்கி அவற்றிற்குள் தங்களுடைய ஆன்மீகப் பெருஞ்சக்தியைப் பாய்ச்சி தமது அருளாற்றலை அச்சிலைகளுக்கு மாற்றினர். இதற்காக விஞ்ஞானமுறை ஒன்றையே உருவாக்கினர். அந்த "ஆன்மீக யந்திரக்கலை" ஆகம சாஸ்திரம் எனப் பெறும். மற்றும் சிலஞானச் செம்மல்களின் அருட்பேருள் ளம் அந்த அளவிலும் மனநிறைவு கொள்ளவில்லை. தாங் கள் "பிரதிட்டை" செய்த சிலைகளுக்கடியிலேயே "திருச் சமாதி" ஆகிவிட்டனர், அதனுலேயே கருவறைகளும் (மூல ஸ்தானங்களும்) அவற்றை நடுவிடமாகக்கொண்ட இந்துக் துக்கோயில்களும் ஆன்மீகப்பெருஞ்சத்தி நிலையங்களாக இன்றளவும் பொலிந்து வருகின்றன. அம்மெய்ஞானச் செம்

மல்களின் அருட்பெருங்கருணையின் திறந்தான் என்னே! மனிதகுலத்திற்கு நலம் சுரப்பதில் அவர்களுக்குத்தான் எவ்வளவு ஆர்வம். பெரியோர்கள் சமாதியான திருக்கோவில்களின் விபரம் அடியில் குறிப்பிட்டுள்ளதைக் காண்க.

அப்பெரியார்களின் பரமகருணை அம்மட்டிலா நின்றது! இக்கோயில்களில் எதை எதைச் செய்யவேண்டுமென்ற "விதிகளையும்" எவ்வெவற்றைச் செய்யக்கூடாதென்ற "விதி விலக்குகளையும்" அவர்களே வரையறுத்தனர். இதற்கும் காரணம் உண்டு. மூலவரிடமிருந்து சுரந்து வெளிவரும் நலந்தரு அருட்கதிர்களின் நல்விளைவைக் குலைக்கக்கூடிய எச்செயலும் கோயிலுக்குள் நிகழக்கூடாதென்பதே இவ் விதிமுறைகளை :வகுத்ததின் நோக்கம். எனவே :கோயில்களின் புனிதமும், அருட்சக்தியும் நீடுநின்று நிலவச்செய்வதில் பக்தர்களுக்கும் பங்குண்டு. இறைவனை. வணங்கக் கோவில்களுக்குச் செல்லும் அடியவர்கள் கோயில்களின் தெய்விக சக்தி நீடித்து நிலைபெறச் செய்யமட்டுமின்றி. கருவறையில் கப்பிக்கொண்டிருக்கும் அருட்கதிர்களில் தோய்ந்து புண்ணியம் பெறவும், தொழுகைவிதிகளையும், வழிபாட்டு ஒழுங்கு முறைகளையும் தவருமல் கடைப்பிடிக்க

---

தில்லையில் - திருமூலர், அழகர்மலை - ராமதேவர், மதுரை - சுந்தரானந்தர், திருவருணை - இடைக்காடர், அனந்தசயனத்தில் - கும்பமுனி, காசியில் - நந்திதேவர், காளத்தியில் - கண்ணப்பர், ராமேஸ்வரம் - பதஞ்சலி, சோதிரக்கம் - சட்டமுனி, திருவாரூர் - கமலமுனி, பழனி - போகர், திருப்பரங்குன்றம் - மச்சமுனி, கருவூரில் - கருவூரார், திருக்கடையூர் - பாம்பாட்டீஸர், பொய்யூரில் - கோரக்கர், திருப்பதியில் - கொங்கணவர், திருக்குற்ருலம்- அகஸ்தியர், மாயூரம் - கல்லுளிச்சித்தர் .

வேண்டும். அப்படிச் செய்தால்தான் கோயில்களின் புனிதமும் நீடுநிலவும்; அவர் தொழுகைக்கும் உரிய பலன் உண்டு.

அவ்வளவு நல்லவர்கள் அல்லாதார்கள் மட்டுமேயன்றி, மனிதரிலேயே சிறந்த நல்லோராகவும், அருள்வாழ்வு வல்லோராகவும் விளங்கும் பெரியோருங்கூடக் கோயில்களுக்கு தவருமல் செல்லவேண்டுமென நமதுமுன்னேர்கள் விதித்துள்ளனர். இதற்குக் காரணம் இருக்கிறது. "சாத்விக வாழ்வு வாழும் அருளாளர்கள்" ஆலயங்களுக்குச் சென்ருல், அதன் விளைவாக கோயிலின் தெய்விக சக்தி மேலும் வளரும்; அதனுல் கருவரையில் நிலவிநிற்கும அருட்சக்திகள் வன்மையும், நன்மையும் பெருகும். அதனுலேயே நல்லோரும் கோவிலுக்குச் செல்லவேண்டுமென்று விதித்துப் போந்தனர்.

## "ஆன்மிகவங்கி"

கோயிலை ஓர் ஆன்மிக வங்கியாக உருவகப்படுத்தலாம் வங்கிக்கு வருவோரில் பணம் வாங்கிக்கொண்டு செல்வோரும் உண்டு. போட்டு செல்வாரும் உண்டு. கோயில்கள் ஆன்மிக சக்தியின் உரைவிடங்களல்லவா? ஆன்மிக வலிமை குறைந்த எளியோர்இச்சக்திஉறைவிடங்களுக்குச் செல்வதால் புதுச்சக்தி பெருகிருர்கள், அதுபோன்றே அருள்வல்லார் சென்ருல் கோயிலின் தெய்விகம் வளர தங்களுடைய ஆன்மிக சக்தியை விட்டுச் செல்கின்ருர்கள்.

இன்னெரு கேள்வி எழலாம். ஒரு விக்ரகத்தைத் தொழுதால். பக்தனுடைய தொழுகை (பிரார்த்தனை)யை எப்படி நிறைவேற்ற முடியும்? கோயிலில் எழுந்தருளியுள்ள மூலத்தானச்சிலை வெறுங்கல்லோ அல்லது வெண்கலமோ அல்ல. அதனைப் "பிரதிட்டை" செய்த அருளாளரின் சக்தி எல்லாம் பெற்றுள்ள திருவுருவு அது; ஏனெனில் அந்த அருளாளர்

சாஸ்திர விதிப்படி அருள் ஆற்றல்களை எல்லாம் அதற்குப் பாய்ச்சி வைத்திருக்கிறார். ஆகவே அது வெறும் சிலையல்ல; ஆன்மிக மின்சார நிலையம் அது. மின்சார நிலையத்துடன் செப்புக் கம்பியை இணைத்தால் மின்சாரம் கம்பியினூடே பாய்ந்து ஓடிவந்து பலவழிகளில் நமக்குப் பயன்படுகிற தல்லவா? அதுபோலவே "பிரதிட்டை" செய்த அருளாளரின் ஆன்மிக அருட்சக்தியை தாங்கி நிற்பவை அத்திருவுருவங் கள். சிரத்தா பக்தியுடன் வழிபடும் அன்பர்களுக்கும் அச் சக்தி நிச்சயம் பாயும். இன்னொரு உவமை; குடியரசுத் தலைவர் ஒரு சாதாரண மனிதரைக் கவர்னராக நியமிக்கிறார் என்றால், ஆட்சி அதிகாரம் அந்த மனிதருக்குக் கிடைக்கிற தல்லவா? அவருடைய அதிகார வரம்புக்கு உள்பட்ட மக் களின் வேண்டுகோள்களையும் நிறைவேற்றி வைக்கக்கூடிய அதிகாரம் அவருக்கு உண்டல்லவா? அதுபோலவே அருளா ளரிடமிருந்து அதிகாரம்பெற்ற அத்திருவுருவங்களும் வேண்டுவார் வேண்டுவன ஈயும் திறமை நிறைந்தன.

## நினைத்தாலே அருளும் திருத்தலங்கள்

சிலையை பிரதிட்டை செய்த முனிவரின் "ஆன்மிக" வலிமை அவ்வளவு பெரியதாக இல்லாதிருந்தால் அக் கோயில்களின் தெய்விக சக்தியும் அவ்வளவு பெரியதாக இல்லாதிருக்கலாம்; அல்லது முறையாக பராமரிக்காததா லும் சக்தி குறைந்திருக்கக்கூடும். அதனால் அடியார்களின் பிரார்த்தனைகளுக்கு அருளும் சக்தி அவ்வளவு அதிகமாக இல்லாமலும் போகலாம். ஆனாலும், சிலகோயில்கள் அளவு கடந்த திருவும், விவரிக்க வொண்ணாத சக்தியும் நிறைந் துள்ளன. ஆன்மிக அருங்கலையையும், ஆகமநெறி அறி வையும் நமது மக்கள் சிறிது சிறிதாக இழந்து வருகிறார்கள். இக்கலையைப் புதுப்பிப்பது நல்லது; நற்பயன் விளைவிக்கத் தக்கது. அது மட்டுமின்றி, இந்துக் கோயில்களின் அடிப்

படைத் தத்துவங்களை உரிய முறையில் மக்களிடையே பரப்ப வேண்டும். அப்படிச் செய்தால்தான், பாரதமெங்கும் பரவி அமைந்துள்ள இந்து ஆலயங்கள் வெறும் காட்சிநிலையங்களாக இராமல், புண்ணிய திருத்தல நிலையில் நெடுழிகாலம் பொலிந்து வாழும். புண்ணியத்திருத்தலங்கள் சிறப்புற்று நீடுநின்று விளங்கலால் "கோயில் விளங்கக் குடிவிளங்கும்" என்ற முதுமொழிப்படி மக்கள் பண்பாட்டுடன் சிறந்து விளங்குவார்கள்.

## ஆலயங்களின் அமைப்பு

பண்டைக்காலத்தில் இயற்கையின் நல்ல சூழ்நிலையே வழிபாட்டுக்குரிய இடங்களாயிருந்தன. வேள்வித்தீயின் மூலம் வழிபாடு இயற்றி வந்தனர். நதிக்கரையிலும் மரச்சோலைகளிலும் தெய்வ வணக்கம் நிகழ்ந்து வந்தது. அத்தகைய விருக்ஷங்கள் புண்ணிய ஸ்தல விருக்ஷங்களாயின. பின்பு ஆகமத்தை அனுசரித்து ஆலங்கள் கட்டுவிக்கப்பட்டன. மலையைக் குடைந்தும் ஆலயங்களை அமைத்து வைத்தார்கள். இப்படி அமைந்த ஆலயங்கள் மானுட சரீரமென்னும் ஆலயத்தின் புறச்சின்னமாகும். மானுட சரீரமே ஆலயங்களில் மிகச் சிறந்தது என்று ஆன்ருேர்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அண்டமெங்கும் குடிகொண்டிருக்கும் தெய்வம் சிறப்பாக மானுட சரீரத்தில் வீற்றிருக்கிருர். ஆனுல் சரீரத்தினுள் தெய்வம் எழுந்தருளியிருக்கிருர் என்னும் கோட்பாட்டைப் பாமரர்கள் எளிதில் அறிந்து கொள்ள முடியாது. பாமரர்களுக்கும பயன்படும் பொருட்டே ஆலயங்கள் எழுப்பப்பட்டுள்ளன. நமக்குத் தோன்றியவாறெல்லாம் கோயில்கள் கட்டலாகாது. ஆகமங்களில் விதித்துள்ளபடியே அவைகளை அமைக்கவேண்டும். தேசபடம் ஒன்றை நமக்குத் தோன்றியவாறு வரையலாகாது. முறையாக அமைந்த தேசபடமோ; இயல்பாக அமைந்த தேசத்தின் சின்னமாகும். அது போலவே, ஆலயம் ஒன்று உடல் என்

ஓும் ஆலயத்தின் புறச்சின்னமாகும். தேசபடத்தின் துணை கொண்டு தேசத்தை நன்கு அறிந்து கொள்வதுபோன்று கட்டுவிக்கப்பட்டுள்ள ஆலயத்தின் துணைகொண்டு நமக்கு இயல்பாக அமைந்துள்ள சரீரம் மென்னும் ஆலயத்தின் தத்துதங்களை நாம் நன்கு அறிந்துகொள்ளமுடியும். ஒவ்வொரு ஆலயத்தோடும் சம்பந்தப்பட்டதாக ரதோற்சவம் என்பது ஒன்று உண்டு. சரீரத்தை ரதம் என்றும் அதன் உள்ளிருக்கும் ஆத்மாவை ரதி என்றும் ஞான சாஸ்திரங்கள் புகட்டுகின்றன. சரீரத்திலுள்ள இயல்புகளை யெல்லாம் ரதத்தில அமைப்பதும் வழக்கமாய் இருந்து வருகிறது. ஒன்று நிலைத்திருக்கும் சின்னம்; மற்றது இயங்குகிற சின்னம். அவைகளின் மூலம் விளக்கப் பெறும் கருத்து ஒன்றேயாம்.

கோயிலுக்கு பெரிய பிரகாரம் ஒன்று எடுத்து அதற்கு வாயில் ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. அந்த வாயிலுக்கு உயர்ந்த ராஜகோபுரம் ஒன்று அமைக்கப்பெறுகிறது. நெடுந்தூரத்துக்கு அப்பால் இருந்தும் இதைக் காணலாம் கண்ணுக்கு அது தென்படும்பொழுது அதையே தெய்வ சொருபமாக எண்ணி வணங்குவது முறை. இயற்கைநடை முறையின் புறச்சின்னமாக அது அமைக்கப்பட்டிருக்கிறது. இயற்கையில் உள்ளவைகளை எல்லாம் அது விளக்குவதாகிறது. கடவுளின் விராட்டுவடிவமாக அதை வணங்கவேண்டும். ஏனைய கருவி காரணங்களை யெல்லாம் இருக்கிறபடி வைத்துவிட்டு, மனது இறைவனை நாடி உள்முகமாகப் போக வேண்டும் என்பது கோபுர வாயிலின் கோட்பாடு. ராஜகோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றதும் நம் காட்சிக்கு வருவது பலிபீடம். அதன் அருகில் சென்று விழ்ந்து வணங்க வேண்டும். விழ்ந்து வணங்கும்பொழுது மனிதனிடத்துள்ள கீழ்மைகளெல்லாம் கீழே விழுந்துவிட்டது, மேன்மையும் மேலான எண்ணமும்தான் எஞ்சியிருக்கிறது என்னும் எண

ணத்துடன் எழுந்திருக்க வேண்டும். அடுத்தபடியில் இருப்பது கொடிமரம். அது உள்முகமாக திரும்பிக் கொண்டிருக்கிறது. மனது ஒருவழிப்பட்டு நிலைத்திருப்பதற்கு அது அடையாளமாகின்றது. மேல் சுற்றி வலம் வருதல் வேண்டும். அது தனது மனப்பான்மையை தெய்வத்துக்குரியதாக மாற்றியமைப்பதாகிறது. கொடி கம்பத்திற்கு அடுத்திருப்பது தெய்வத்துக்குரியவாகனம், சிவபெருமானுக்கு நந்தி வாகனம், மகாவிஷ்ணுவுக்கு கருடவாகனம், அம்பிகைக்கு சிம்ம வாகனம், வாகனம் எதுவாயினும் அது ஜீவாத்மனைக் குறிக்கிறது. கடவுளைச் சென்றடைவதற்கு சர்வகாலமும் மனது கடவுள் நாட்டத்திலேயே இருக்க வேண்டுமென்னும் கோட்கோட்டை வாகனம் விளக்கிக்கொண்டிருக்கிறது. அதற்கடுத்து விக்னங்களை போக்குபவரும் அறிவைத் தூண்டுபவருமாக இருப்பது ஓங்காரப் பிரணவ சொருபியாகிய விநாயகக் கடவுள். சக்தியையும் அருளையும் அளிக்க வல்ல ஆறுமுகனுகிய சுப்பிரமணியக் கடவுள். அறிவும் ஆற்றலும் படைத்தவனே இறைவனைத் தரிசிக்கத் தகுதியுடையவன் என்பதை அவ்விருமூர்த்திகளும் விளக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் கணபதியையும். முருகனையும் வணங்கி பூரண அருளைப்பெறவேண்டும். பின்னர் கோயிலின் கர்ப்பக்கிரகத்துக்குச் செல்லும்பொழுது அது இருள் சூழ்ந்ததாக இருக்கிறது; காற்றுக்கோ. சூரியவெளிச்சத்துக்கோ ஆங்கு இடமில்லை. கருவி கரணங்கள் ஒடுங்கி மனதை உள்முகமாகத் திருப்பினால் என்ன அனுபவம் உண்டாகின்றதோ; அதற்குச் சின்னமாக கர்ப்பக்கிரகம் அமைந்திருக்கிறது. நம் கண்களை மூடிக்கொண்ட பொழுது ஒரே கார் இருளைத்தான் காண்கிறோம். இருளை விலக்கும்பொழுது அறிவு பிரகாசிக்கிறது. கர்ப்பகிரகத்தின் அருகில் சென்று பக்தன் தரிசனத்திற்காகக் காத்திருக்கிறன். திரைமூடப்பட்டிருக்கிறது. சிறிது நேரத்திற்குள் மணிஓசை கேட்கிறது.

இனிவிரைவில் தரிசனம் கிட்டும் என்று பக்தன் ஆர்வத்துடன் எதிர்பார்த்து நிற்கிருன். திரை நீங்குகிறது. உள்ளே கற்பூர ஆராதனை காட்டப்படுகிறது. அதன் வெளிச்சத்தில் தெய்வத்தின் விக்கிரஹத்தைப் பக்தன் தரிசிக்கிருன். விக்கிரஹம் என்னும் எண்ணம் அவன் மனதில் உதிப்பதில்லை; தெய்வத்தையே தரிசிப்பதாக உணருகிருன். இது ஞானக்காட்சியின் புறத்தோற்றமாகும். மனதை தன்னுள் ஒடுக்கிப் பழகுபவனுக்கு ஓர் அனுபவம் கிட்டும், தன் உள்ளே ஒருவித இனிய ஓசையை அவன் கேட்பான்; புகை போன்றும், மின்மினி போன்றும் சில காட்சிகளைக் காண்பான் இவைகளெல்லாம் சாதகன் முன்னேறி வருவதின் அறிகுறியாகும். பழகப்பழக இறுதியில் தம் மனத்தகத்திருக்கும் அக்ஞானம் என்னும் திரை நீங்குகிறது. ஞான ஒளியின் தரிசனம் கிட்டுகிறது. அந்த ஞான ஒளியும் ஆத்மசொருபமும் ஒன்றேயாகும். அங்ஙனம் மனத்தினிடத்துண்டாகும் ஆன்மதரிசனத்துக்குப் புறச்சின்னமாக ஆலய தரிசனம் அமைந்திருக்கிறது. கோயிலுக்குள் ஒருவரோடொருவர் பேசாதிருந்து வழிபாடுசெய்வது சாலச்சிறந்தது. வழிபாட்டை முடித்தானபிறகு ஓர்இடத்தில் அமைதியாக அமர்ந்திருந்து தியானம் பண்ணுவது முற்றிலும் அவசியம். பல பெரியோர்கள் ஆழ்ந்து எண்ணிய உயர்ந்த எண்ணங்கள் நிறையப்பெற்ற இடம் ஆலயம். அருளைத தானே அடைவதன் மூலம் அன்பன் ஆலயத்தின்கண் அருளைப் பெருக்குகிருன். ஆலயவழிபாட்டின் ஒப்பற்ற பயன் இதுவேயாகும்.

## இஷ்டதெய்வம்

"ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தி" என்பது சுருதி. மெய்ப்பொருள் ஒன்று. சான்ரேர் அதற்குப் பல பெயரிட்டிருக்கின்றனர். கடவுள் பிரபஞ்சமாகவும் உள்ளும்கடந்து அப்பாற்பட்டும் இருக்கிருர். எல்லாவற்றிலும் கடந்தும் உள்ளும் வியாபித்திருக்கும் பொருள் கடவுள்.

நீரானது ஆவியாக எங்கும் வியாபித்திருக்கிறது. அப்பொழுது அது கட்புலனுவதில்லை. அதற்கு வடிவமும் நிறமும் கிடையாது. அருவப் பொருள் என்று அதை இயம்பலாம். அதே நுண்ணியவஸ்து உறைந்து பனிக்கட்டியாகும் பொழுது அதற்கு வடிவம் வருகிறது. ஆகவே அதற்கு உருவமும் உண்டு; அருவமும் உண்டு. ஒருபொருளே பலபாங்குகளில் புலப்படுகிறது. தெய்வம் அத்தகையது. அவை புலன்களுக்கெட்டாத அருவமாகவும், மாயையால் தன்னைப் பல வடிவங்களில் தோற்றுவித்துக்கொண்டு உருவமாகவும் இருக்கிறுர். தூயமனது அதன்மகிமைகளை தெரிந்துகொள்ள வல்லதாகிறது.

வேதத்தை அங்கீகரிக்கும் சமயங்கள் ஆறு. இந்த ஆறு சமயங்களையும் உள்ளடக்கியிருப்பதே இந்துமதம். ஆறுசமயங்கள்தோறும் வேறுவேருய் விளையாடும்பொருள் ஒன்றே. வழிபடும் பக்தன் தனது உபாசனமூர்த்தியாக இந்த ஆறனுள் எதைவேண்டுமானலும் எடுத்துக்கொள்ளலாம். சமரச நோக்கமுடைய பக்தன் தான் வழிபடும் தெய்வந்தான் ஏனைய பெயர்கள்பெற்று வெவ்வேறு வடிவங்களில் காட்சியளிக்கிறுர் என்பதை நன்கு ஞாபகத்தில்வைத்துக்கொள்ள வேண்டும். சிவன்; விஷ்ணு, கணபதி, முருகன், சக்தி சூரியன், இவைகளே முறையாக சைவம், வைஷ்ணவம், காணுதிபத்தியம், கௌமாரம், சாக்தேயம், சௌரம் என்னும் ஆறு சமயத்தார்கள் சிறப்பாகக்கொண்டாடும் தெய்வங்களாகும்.

புராணங்களில் ஒரு தெய்வத்திற்கு உயர்வுகொடுத்தும் மற்ருெரு தெய்வத்திற்கு தாழ்ந்த இடம்கொடுத்தும் கூறும் பகுதிகளைக் காணலாம். அப்படி அவை பகர்வதின்நோக்கம் ஒன்றுஉண்டு. வழிபடும் சாதகன் தனது வழிபாட்டுக்குரிய இஷ்டதெய்வமாக இவைகளுள் ஏதேனும் ஒன்றை எடுத்துக்கொள்கிருன். அத்தகைய சாதகனுக்கு இஷடநிஷ்டை ஏற்படுவதற்கு அவன் வணங்கும் தெய்வமே மிகப்பெரியது

என்று அவனுக்குப் புகட்டுவது அவசியமாகிறது. ஒவ்வொரு குழந்தையும் தன்தாயே உலகில் மிக உயர்ந்தவள் என்று எண்ணிக்கொள்கிறது. குழந்தை அப்படி எண்ணுதலில் குற்றம் ஒன்றுமில்லை. அப்படி எண்ணினால்தான் குழந்தைக்கு மாத்ரு பக்தி அதிகரிக்கிறது. அக்குழந்தை வயதானபின்னர் தன் எண்ணத்தைத் திருத்தி அமைத்துக்கொள்கிறது. அதைப்போன்று சாதகன் ஆரம்பதசையில் தன்தெய்வம் மற்றவர் தெய்வத்தைவிட மேலானது என்று எண்ணுவது இயல்பு. அவர்களுடைய எண்ணத்துக்கு இடம்கொடுத்து புராணங்கள்; தெய்வங்களுக்கிடையில் உயர்வுதாழ்வு படுத்திப் பேசுகின்றன. இது முடிவான உண்மையல்ல என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். சாதகன தான்வழிபடும் தெய்வமாக எதைஎடுத்துக்கொள்கிறானோ அதனையே சர்வகாலமும் உபாசித்துவர வேண்டும். உபாசனை வலுக்குமளவு; தான் வணங்கும் தெய்வம் தன் மனத்தகத்து எழுந்தருளிஇருப்பதை உணர்வான்; நேரில் கண்டானபின்னர் தன்னோடு கலந்து ஒன்றுவதை அனுபவித்தறிவான். பெறவேண்டியவனைத்தும் பெற்றவனாவான். ஜீவர்கள் குறையகன்று நிறைநிலையை எய்துவதற்கு ஆண்டவன் வழிபாடொன்றே உற்ற உபாயமாகும். ஆகவே இந்நூலில் ஈசுவரனுடைய அநேக மூர்த்திகளின் வைபவங்களைக் காட்டக்கூடிய தோத்திரங்கள் அவசியமானதால் பிராசீனமான துதிகளிகலிருந்து முக்கியமானவைகளை இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அன்பர் பொருளுணர்ந்து துதித்துப் பயன்பெறுவார்களாக.

—|—

உ

ஸ்ரீ கணேசாய நம:

# ஆலயங்களில் தர்சனம் ஸ்தோத்திரம் செய்யவேண்டிய கிரமம்

---

## நந்தி ஸ்துதி

நந்திகேஸ மஹா பாக சிவத்யான பராயண!
கௌரீ ஸங்கர ஸேவார்த்தம் அநுக்ஞாம் தாதுமர்ஹஸி!!

(இ-ள்) சிவனடியிற் சரணம் புகுந்து சிவத்யானத்திலாழ்ந்திருக்கும் மஹாபுண்ணியம் பெற்ற நந்திகேஸ்வரனே! ஸந்நிதியில் சென்று பார்வதிபரமேஸ்வரர்களை தர்சிக்க எனக்கு உத்தரவு தந்தருள்வாய்.

## விநாயக ஸ்துதி

கஜாநநம் பூதகணாதி ஸேவிதம் கபித்த ஜம்பூ
பலஸார பக்ஷிதம்; உமாஸுதம் ஸோக விநாஸ
காரணம் நமாமி விக்னேஸ்வர பாதபங்கஜம்.

(இ-ள்) யானை முகத்தை யுடையவனும் பூதகணங்களால் ஸேவிக்கப்படுபவனும் விளாங்கனி நாவல்கனிக

ளின் ஸாரத்தை புண்பவனும் துன்பங்கள் வராமல் பாது காப்பவனும் பிறப்பு இறப்பாகிய சோகங்களை நிவர்த்திப் பவனும் பார்வதீ புத்திரனுமாகிய விநாயகக் கடவுளின் பாத தாமரைகளில் நமஸ்கரிக்கின்றேன்.

## ஸுப்ரமண்ய ஸ்துதி

நீலகண்ட வாஹனம் த்விஷட்புஜம் கிரீடினம்.
லோலரத்ன குண்டலப்ராபா பிராம ஷண்முகம்.
சூல ஸக்தி தண்டகுக் குடாக்ஷமாலிகாதரம்
பால மீஸ்வரம் குமார ஸைலவாஸினம் பஜே.

(இ-ள்) மயில் வாஹனனும், பன்னிரண்டு புஜங்களை யுடையவனும், கிரீடத்தைத்தரித்தவனும், அசைந்தாடி ஜ்வலிக்கும் ரத்ன குண்டலங்களுடையவனும் காந்தியினால் அழகாய்விளங்குகிற ஆறுமுகங்களுடையவனும், சூலாயுதமும், வேலாயுதமும், கதாயுதமும், சேவல் கொடியும், ஸ்படிகமாலை தாங்கியவனும், பாலவடிவம் பெற்றவனும், குமரமலையில் எழுந்தருளி யிருப்பவனுமாகிய ஈஸ்வரனை பஜிக்கின்றேன்.

## சிவஸ்தோத்திரம்

ஹேசந்த்ர சூடமதனாந்தக சூலபாணே
ஸ்தாணோ கிரீஷ கிரிஜேஷ மஹேஸ ஸம்போ.
பூதேஸ பீதபயஸூதன மாமநாதம்
ஸம்ஸாரதுக்க கஹனாஜ் ஜகதீஸ ரக்ஷ.

(இ-ள்) சந்திரனை ஜடையில் தரித்தவனே! மன்மதனை எரித்தவனே! சூலாயுதம் ஏந்தியவனே! அசையா நிலையில் அமர்ந்தவனே! கிரியின் ஈசனே! மஹேஸ்வரனே! மலை

மகளின் மணாளனே! சுகம் தருபவனே! பூதகணங்களின் தலைவனே! பயந்தவர்களின் பயங்களைப் போக்குபவனே! ஜகத்திற்கெல்லாம் ஈஸ்வரனே! ஸம்ஸாரமாகிய பெரும் துன்பத்தினின்றும் (என்னை) காப்பாற்றுவீராக.

அந்யதா ஸரணம் நாஸ்தி த்வமேவ ஸரணம்மம,
தஸ்மாத் காருண்யபாவேந ரக்ஷரக்ஷ மஹேஸ்வர

(இ-ள்) ஹேபரமேஸ்வர! எனக்கு வேறுகதியில்லை; நீயேதுணை; ஆகையால் என்னை கைவிடாது கருணை கூர்ந்து காப்பாற்றுவாயாக.

## அம்பிகை ஸ்தோத்திரம்

மாதா மரகத ஸ்யாமா மாதங்கி மதஸாலினி,
குர்யாத் கடாக்ஷம் கல்யாணி கதம்பவன வாஸினி.

(இ-ள்) மரகதம் போன்ற அழகிய பச்சைத் திருமேனியுடையவளும். மதத்தால் சோபிக்கிறவளும், கதம்பவனத்தில் வஸிப்பவளும், மங்களத்தைக் கொடுப்பவளும், லோகமாதாவுமாகிய மாதங்கிதேவி கடைக்கண்ணால் பார்ப்பாளாக.

ஓங்காரபஞ்சரஸுகீம் உபநிஷதுத்யான கேளிகலகண்டீம்
ஆகமவிபின மயூரீம் ஆர்யாமாந்தர் விபாவயேத் கௌரீம்

(இ-ள்) பிரணவமாகிய கூண்டினுள் வசிக்கும் பெண் கிளியும், உபநிஷதங்களாகிய பூந்தோட்டத்தில் பாடும் பெண்குயிலும், வேதங்களாகிய மஹாரண்யத்தில் விளையாடும் பெண்மயிலுமாகிய ஸ்ரீ கௌரிதேவியை ஹ்ருதய கமலத்தில் தியானிக்கிறேன்.

## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்துதி

குரவே ஸர்வலோகானும் பிஷஜேபவ ரோகிணும்,
நிதயே ஸர்வ வித்யானும் தக்ஷிணாமூர்த்தியே நம:

(இ-ள்) எல்லோருக்கும் குருவாகியவரும், ஸம்ஸார வியாதியைப்போக்கும் மகாவைத்தியரும், வித்தைகளுக்கெல்லாமிருப்பிடமானவரும் ஆகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

வடதரு நிகடநிவாஸம் படுதரவிக்ஞான முத்ரித கராப்ஜம்.
கஞ்சன தேஸிகமாத்யம் கைவல்யானந்த கந்தமலம்பே;

(இ-ள்) மஹா வடவிருக்ஷத்தினடியிலமர்ந்து ஞான முத்திரையை கையிலமைத்து உபதேசம் செய்யும் மோக்ஷானந்த ஸ்ருபியாகிய ஆதிமஹா குருவைச் சரணமடைகிறேன்.

## சண்டேஸ்வர ஸ்துதி

நீலகண்டபாதாம் போஜ பரிஸ்புரித மானஸ,
ஸம்போஸ் ஸேவாபலம் தேஹி சண்டேஸ்வர நமோஸ்துதே.

(இ-ள்) சிவபெருமான் திருவடித் தாமரையில் நிலைபெற்ற மனதை யுடையவனே ஹேசண்டிகேஸ்வர! அடியேனுக்குப் பரமேஸ்வர தரிசனத்தின் பலனைத் தந்தருள வேண்டுமென்று உன்னை நமஸ்கரிக்கிறேன்.

## நவக்கிரஹ ஸ்துதி

பிரம்மா முராரி ஸ்திரி புராந்தகஸ்ச பானு; ஸஸி
பூமிஸுதோபுதஸ்ச, குருஸ்ச சுக்ர: ஸநி ராகு
கேதவ: குர்வந்து ஸர்வே மமஸுப்ர பாதம்,

(இ-ள்) பிரம்மா விஷ்ணு ருத்திரர்களும், ஸூர்யன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது இவர்கள் எல்லோரும் இன்று எனக்கு நற்பொழுது விடிவை தந்தருளட்டும்.

## கோபுரத்வாரத்தில் செய்யும் ஸ்தோத்திரம்

மஹாபலி முகாஸ் ஸர்வே சிவாக்ஞா பரிபாலகா;
மயா ஸம்ப்ரார்த்திதாயூயம் வர்தத்வம் சிவஸந்நிதௌ.

(இ-ள்) சிவாக்ஞையைப் பரிபாலிக்கும் மஹாபலி முதலான பக்தர்களே! என்னுல் பிரார்த்திக்கப்பட்ட நீங்கள் சிவஸந்நிதியில் சுகமாய் வஸிக்கக்கடவீர்கள்.

## ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்திரம்

ஸாந்தா காரம் புஜகஸயனம் பத்மநாபம் ஸுரேஸம்
விஸ்வாகாரம் ககனஸத்ருஸம் மேகவர்ணம் சுபாங்கம்.
லக்ஷ்மீகாந்தம் கமலநயனம் யோகிஹ்ருத்யான கம்யம்
வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைக நாதம்.

(இ-ள்) சாந்தஸ்வருபியும், சேஷசயனனும், பத்மநாபனும், தேவதேவனும் சராசராத்மகனும், ஸர்வவியாபியும், மேகவண்ணனும், அழகிய அங்கங்களுடையவனும், லக்ஷ்மிகாந்தனும், கமலக்கண்ணனும், யோகிகளின் ஹ்ருதயத்தில் த்யானத்தால் அடையத்தகுந்தவனும், ஜனன மரண துன்பங்களைப் போக்குபவனும், எல்லா உலகிற்கும் ஒரே நாதனுமாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நமஸ்கரிக்கின்றேன்.

## ஸ்ரீ ராமர் ஸ்துதி

ஸ்ரீராமசந்த்ர கருணாகர தீனபந்தோ
ஸீதாஸமேத பரதாக்ரஜ ராகவேச;
பாபார்த்தி பஞ்ஜன பயாதுர தீனபந்தோ
பாபாம்புதௌ பதிதமுத்தர மாம நாதம்.

(இ-ள்) ஹே! ராமசந்திரனே, கருணையைச் செய்பவனே, ஏழைகளின் பந்துவே. ஸீதையுடன் இருப்பவரே, பரதனுக்குத் தமையனே, ராகவனே. ஈஸ்வரனே, பாபம், துக்கம் இவைகளைப் போக்குபவனே, பயத்தால் கஷ்டப்படும் தீனர்களுக்கு உறவினரே, பாபக்கடலில் விழுந்த அனுதனான என்னைக் கைதூக்கி விடுவாயாக.

## லக்ஷ்மி ஸ்தோத்திரம்

மாதர் நமாமி கமலே கமலாயதாக்ஷி
ஸ்ரீவிஷ்ணு ஹ்ருத்கமல வாஸினி விஸ்வ மாத;
க்ஷீரோதயே கமலகோமள கர்ப்பகௌரி
லக்ஷ்மீப்ரஸீத ஸததம் நமதாம் ஸரண்யே.

(இ-ள்) எவ்வுயிர்க்கும் தாயே! கமலாலயே! கமலக் கண்ணி! விஷ்ணுவின் ஹ்ருதயகமலத்தில் வசிப்பவளே! லோக மாதாவே! பாற்கடலில் உதித்தவளே! தாமரை. போன்ற சரீர வனப்புடையவளே! வணங்குகிறவர்களை ரக்ஷிப்பவளே! ஹே மஹாலக்ஷ்மி! நீ என்றும் அனுக்கிரஹிப்பாயாக.

## கருட ஸ்துதி

குங்குமாங்கித தேஹாய குந்தேந்து தவளாயச,
விஷ்ணுவாஹன நமஸ்துப்யம் பக்ஷிராஜாயதேநம;

(இ-ள்) குங்குமம் போன்ற சென்னிறம் வாய்ந்த சரீரமும், மல்லிகை, சந்திரன் இவைபோன்ற வெண்ணிற முள்ள கழுத்துமுடைய விஷ்ணுவாஹனமான ஹே! பக்ஷி ராஜனே உனக்கு நமஸ்காரம்.

## ஆஞ்ஜநேய ஸ்தோத்திரம்

ஆஞ்ஜனேமதி பாடலானனம் காஞ்சனாத்ரிகமனிய விக்ரஹம்
பாரிஜாததரு மூல வாஸினம் பாவயாமிபவ மானநந்தனம்.

(இ-ள்) மிகச்சிவந்த முகமுடையவரும், சுவர்ணமலை போன்ற அழகிய சரீரமுள்ளவரும்' பாரிஜாத விருக்ஷத்தினடியில் வஸிப்பவரும், அஞ்சனாதேவியின் குமாரனும், வாயு புத்திரனுமான ஹனுமானை தியானம் செய்கிறேன்.

## அரசு விருக்ஷ ஸ்துதி

மூலதோ ப்ரும்ம ரூபாய மத்யதோ விஷ்ணுரூபிணே.
அக்ரத: ஸிவரூபாய விருக்ஷராஜாயதே நம:

(இ-ள்) அடியில் பிரம்மனும், நடுவில் விஷ்ணுவும், நுனியில் ஸிவபெருமானும் நிலைபெற்ற அரச மரமே! உனக்கு நமஸ்காரம்.

## துளஸி செடியின் ஸ்துதி

யந்மூலே ஸர்வ தீர்த்தானியந்மத்யே ஸர்வதேவதா;
யதக்ரேஸர்வ வேதாஸ்சதுளஸீம்தாம் நமாம்யஹம்.

(இ-ள்) அடியில் எல்லாப் புண்ய தீர்த்தங்களும், நடுவில் முப்பத்து முக்கோடி தேவர்களும், நுனியில் ஸகல வேதங்களும் நிலைபெற்ற ஒப்பற்ற துளஸிதேவியை நமஸ் கரிக்கின்றேன்.

காயத்ரீம் துளஸீம் கங்காம் காமதேனு மருந்ததீம்.
பஞ்சமாத்ரு; ஸ்மரேந்நிதயம் மஹாபாதக நாஸனம்.

(இ-ள்) பிரம்மஹத்தி முதலிய மஹாபாங்களை போக்கும் காயத்திரி, துள ஸி, கங்கை, காமதேனு, அருந்ததியாகிய இவ்வைந்து தாய்மாரையும் அனுதினமும் நினைக்க.

## மங்களம்

மங்களம் கோஸலேந்திராய மஹனிய குணாத்மநே,
சக்ரவர்த்திதனூ ஜாயஸார்வ பௌமாய மங்களம்,

(இ-ள்) கோஸல நாட்டின் அதிபதியும், கல்யாண குணமுடையவனும், சக்ரவர்த்தித் திருமகனும், ராஜாதி ராஜனுமான, ரகுவீரனுக்கு மங்களம்.



# திருநாவுக்கரசு திருத்தாண்டகம்

நிலைபெறு மாறெண் ணுதியே நெஞ்சேநீவா
நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்குப்
புலவர்தன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டு
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி சங்கரா
செயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மாதி யென்றும்
ஆரூரா யென்றென்றே அலறாநில்லே.

திருக்கோவி லில்லாத திருவிலூருந் திருவெண்ணீ
ரணியாத திருவிலூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும்
பாங்கினொடு பலதளிகளில்லாவூரும்
விருப்பொடு வெண்சங்க மூதாவூரும் விதானமும்
வெண்கொடியு மில்லாவூரும்
அருப்பொடு மலர் பறித்திட்டுண்ணா வூரும்
அவை யெல்லாமூரல்ல வடவிகாடே

திருநாமமஞ் செழுத்தும் செப்பாராகில்
தீவண்ணர் திறமொரு காற்பேசாராகில்
ஒருகாலும் திருக்கோவில் சூழாராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட்டுண்ணாராகில்
அருநோய்கள் கெடவெண்ணீரணி யாராகில்
அளியற்றார் பிறந்த வாறேதோ வென்னில்
பெருநோய்கள் மிக நலியப்பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே.

# நற்சிந்தனைகள்

கடவுளை நாம காணுவிடினும் கடவுள் நம்மைக் கண்டு கொண்டேயிருந்து நாம் செய்யும் நன்மை தீமைகளுக்கு "நியாயம்" தருகிறார்.

இம்மானவ லோகத்திலே இயல்பாக புண்ணிய பல மான சுகத்தையே இச்சிக்கின்றார்கள்; அதற்குச் சாதன மான புண்ணியத்தை அனுஷ்டிக்கின்றார்களில்லை. பாவ பலமான துக்கத்தை வெறுக்கின்றார்கள்; பாவத்தைத் தானே முயற்சியோடு கூட அனுஷ்டிக்கின்றார்கள். அத ளுல் அநேக வித அனர்த்தங்களுக்காளாகின்றனர்.

இறந்த பின்பும் இறக்காமல் நிலைபெற்றிப்பது "தர்மம்" ஒன்றே. ஆகவே அதனை அன்புடன் இப் பொழுதே செய்வார்களாக.

---

இப்புத்தக விற்பனையின் ஊதியத்தை, மனகுடி மங்கலம் காளியம்மன் கோவில் மராமத்துச் சிலவுக்காகப் பயன்படுத்தப்படும்.

**விலை 0 4 0**

திருமால் அச்சகம், மதுரை.-1 60